# சப்ததாதுக்களின் விபரம்.

ஆணில் ௩ (3). பெண்ணில் ௪ (4). ஆணில் மூன்றாவன ஆகாசம் பிரகிருதி ஆன்மவுணர்ச்சி இவைகளொருமித்துச் சுக்கிலமாகக் கோசத்தடியில் செம்பாத்த பூவிதழ் மூன்றுமொன்றாயடிப்பது போலிருக்கும். பெண்ணிடத்தில் நான்காவன பிருதிவி, அப்பு, தேயு, இயமானென்னும் வாயு ஆகநான்கும் ஒருமித்துப் பல்லி முட்டைபோல் நான்காகப்பிரிந்து ஒரேவண்ணமாய் யோனிக்குளிருக்கும். ஆக - ஏ - வும்கூடி ஒருமித்துச் சுக்கிலசுரோணித சம்பந்தப்பட்டுப் பிண்டமாம். இது சப்ததாது, ஷை தாதுக்களின் பெயர். தோல், அஸ்தி, தசை, மூளை, சுக்கிலம், இரத்தம், இரசம் ஆக ஏழு.

ஷை சத்துக்கள் ஆணிடத்துள்ள இடங்கள் மூளை, தொப்புள் லிங்கத்தடி, பெண்ணுக்குள்ள இடங்கள் மூளை, தொப்புள், உபஸ்தத்தடி, ஸ்தன்னியத்தின்கீழ் புணர்ச்சி காலத்தில் இந்த சத்துச்சேர்ந்து வெளிப்பட்டால் கற்பமுண்டாம்.

**பிண்டலட்சணம்**: - தலை அண்டம், மார்புமுதலானவை பிண்டம். அண்டத்திற் பிண்டம் புருவமத்தி. அண்டத்திலண்டம் பிரமரந்திரம் இதில் சோமசூரியாக்கினி பிரமவிஷ்ணுக்கள் இருக்குமிடம். நேத்திரம், புருவமத்தி, அண்ணா, பிரமரந்திரம். இதில் பிரகாசமாயும் அறிவாயும் பிராணவாயு இருக்கின்றது. பிண்டத்திற் பிண்டம். இடுப்புக்குக் கீழ்பாதபரியந்தம் பிண்டத்திலக்கணம். பீசம், பிண்டம், வயிறு, ஷ பிண்டஸ்தானத்தில் கர்த்தர்களிருக்குமிடம் கோசம், தொப்புள், மார், இவர்கள் வண்ணம் நாடி, உஷ்ணம், காற்று குறிமுதலிய பேதங்களாம். ஆதலால் பிரம, விஷ்ணு, ருத்திரதேவர்கள் அனந்தகோடியண்டத்தைப் பார்க்கிலும் பிண்டவிசாலமுள்ளது. இதுபோலவே பிரமாண்ட ஞாயம்.

இந்தத்தேகத்தில் ஜீவனிருக்கிற ஸ்தானம் ௫ (5), அதில் முக்கியஸ்தானம் உ (2). கணம், சிரம் சிரத்திலுள்ளது பரமாத்மா வென்னுஞ் சாமான்யஜீவன். இஃதிறப்பதன்று, கண்டத்திலுள்ளது ஜீவாத்மாவென்னும் விசேஷ ஜீவன், இஃதிறக்கும். ஷை தேகத்தில் பிரம்மபேதம் கீழும்மேலும் இருப்பதால் நாமடைய வேண்டிய பதஸ்பானங்கள் யாதெனின் கண்டமுதல் உச்சிவரையில் அடங்கியிருக்கின்றன. ஷை பதங்களாவன சுவர்க்க பூர்வமாக சதாசிவபதமீறாகவுள்ளன. இதற்குமேல் நாதாதி சுத்த மீறாகவுள்ளது கைலாசாதிபதங்கள். உந்திக்குமேல் கண்டமீறா கவுள்ளது யிது சாதாரணபாகம், நரக இடமாவன, உந்திமுதல் குதபரியந்தம் கர்மஸ்தானம் குதமுதல் பாதமீறாகவுள்ளது, இவைகளில் பிரம்மாதிப் பிரகாசமுள்ளது. அநுபவிப்பது, கண்ணிடத்தி லிந்ததேகத்தில் எயனிருக்குமிடம் குதமாகிய நரகஸ்தானத்திற்கு இடதுபாகம் ஷை தேகத்தில் ஆன்மா தனித்திருக்கும். ஜீவன் மனம் முதலிய அந்தக்கரண கூட்டத்தின் மத்தியிலிருக்கும்.

# சப்ததாதுக்களின் விபரம்

பிண்டத்தில் பூர்வம் என்பது தலை உத்தரம் என்பது கால் (பூருவம்) என்பது பூர்வசம்பந்தத்தால் வந்தபெயர். பூர்வஞான மென்பது நெற்றிக்கண்ணால் பார்த்தல், பிண்டத்திற்குக் கிழக்குமுகம் மேற்குகால் வடக்கு வலதுகை தெற்கு இடதுகை தொப்புளடி கொடிமரம். ஷை மரத்தின் அளவு உள்ளுக்குக் கொடிபுருவம் சதிக்குள்ளிருக்கும்வபை தொப்புள் பலிபீடம், நந்தியென்பது பசு, ஆணவமலம் மூலாதாரத்தினது உள்ளங்கமே சிவலிங்கம். வாய் வாசல், புருவமத்திசமை, அறிவேபதி. ஆடுகால் அநாதி தலை, கீழ்தலை மேல்கால் ஆதலால் பூர்வம் பூர்வ பூர்வம் உத்தரம் உத்தரோத்திரம் என நான்கு.

இதில் பூர்வமென்பது புறபுறமாகிய நட்சத்திரம் போன்ற இந்திரியக்காட்சி, பூர்வபூர்வம் புறமாகிய சகிபோன்ற காணக் காட்சி உத்தரம் அகப்புறமாகிய பரிதிபோன்ற ஜீவகாட்சி. உத்த ரோத்தரம் அகமாகிய அக்கினி போன்ற ஆன்மகாட்சி, ஆதலால் அகம், அகப்புறம், புறம், புறப்புறம், என்னும் நான்குமே. மேற் குறித்த பூர்வாதி உத்தரோத்திர மெனவழங்குவது, ஆணுக்குள் பெண்ணும் பெண்ணுக்குள் ஆணுமிருக்கும் விதம் எவ்வாறெனின் பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், பிரகிருதி ஆன்மா என்னும் இவ்வேழும் கூடி சுக்கில சுரோணித சம்பந்த சப்ததாதுவாய் சிருட்டிக்குக் காரணமாச்சுது. ஆதலால் ஆண்பாகஞ்சேராது பெண்ணுருவமாகாது பெண்பாகஞ்சேராது ஆணுருவமாகாது. மேலும் மேலும் ரூபபேதத்தைப் பெண்ணானென்பது அறியாமை.

மேலும் அறிவின் உயர்வு தாழ்வினாலும் சிருட்டிக்குக் காரணமான வித்துத் தங்குவதற்கு க்ஷேத்திரமானதாலும் ஒருவாறு உருவத்தால் கொள்ளலாம். அநுபவத்தால் கொள்ளலாகாது. அறிவின் உயர்வு தாழ்வு என்பது ஜீவ அறிவாகிய மன அறிவு பெண்ணினும் ஆன்மவறிவாகிய அறிவு ஆணிடத்தும் உள்ளது. மேலும் மனவறிவு புத்தியறிவு யென்னுஞ் சொல்லக்கூடும் ஆதலால் உருவங்குறிப்பது அவசியமல்ல. மேலும் ஆகாசத்தில் பிருதுவி தோன்றுவதுபோல் ஸ்திரிபாகமாக்கிய பிருதுவியில் ஆகாசமும் தோன்றும். ஆனதால் அநுபவத்தில் தெரியும்.

(வடலூரார் குறிப்பு)

காஞ்சி. நாகலிங்க முதலியார்.

சித்தாந்தம் - 1913 ௵ - நவம்பர் ௴